ஸ்ரீ

உ



# ஸ்ரீ காந்திமதியம்மன்

## பேரில்

## ஆசிரிய விருத்தம்.


சுவாமி நெல்லையப்பர் ஸ்ரீகாந்திமதியம்பாள் தேவஸ்தானம்

திருப்பணியாட்சியாளர்

**A. முத்தையபிள்ளை B. A., B. L.,**

அவர்களால்



திருநெல்வேலி டவுண்

ஸ்ரீ மீனும்பிகை பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

1933.

# முகவுரை

---

இதனுட் பதிப்பிக்கப்படும் ஆசிரிய விருத்தங்களடங்கிய ஏட்டுப்பிரதியொன்று பெருங்குளத்திலிருக்கும் செங்கோல் மடத்துப் பண்டாரச்சந்நிதியவர்களிடமிருந்து கிடைத்ததென்று எனது நண்பரும் தமிழபிமானியுமாகிய ஆழ்வார்குரிச்சி மேலப்பண்ணை M. P. S. துரைசாமி முதலியாரவர்கள், B. A., B. L., சில நாட்களுக்கு முன் எனக்கனுப்பினார்கள். பாட்டுக்களனைத்தும் செம்பாகமாயும் இனியவாயும் எளியவாயும் சிறந்தநடையினவாயும் படிப்போர்க்குப் பத்திவிளைக்கும்பான்மையதாயும் இருத்தலின் அம்பிகையைப்பணிந்து போற்றும் மெய்யன்பர்கட்குப் பெரிதும் பயன்படுமென்று கருதி அச்சில் வெளியிடலானேன்.

அ. மு.

# காந்திமதியம்மன் பேரில்

## ஆசிரியவிருத்தம்.

1. சீருறையு மமுதப்பெருந்திரை புரட்டியெறி
செய்ய பா லுததி நடுவட்
சீற்றக் கொடும்பணவமளியிற்றுயிலண்ணல்
செங்கணெழிலைச் சூறைகொண்
டேர்தரு மறைச்சிலம்போலிடு மலர்க்கழலு
மிலகுசெம்பட்டினுடையு
மேமச்சிலம்பைக் குழைத்த கையானுடலு
மிதையமுங் குழையமலைபோல்
மார்பிற்பொருங் குங்குமக் கொங்கையுந்தாள
மாலிகையு மணிவீணையு
மாசற்றசெஞ்சொற் பசுங்கிளியுந்தாங்கி
வளர்கரமு மதிவதனமுங்
கார்கொண்டகுழலு முத்தொழிலினரையேவல்கொள்
கடாட்சமு முளத்தின் மறவேன்
காந்திமதி யுலவு பொழில்சூழ்ந்தவரைவனமருவு
காந்திமதி வடிவரசியே.

2. செங்கேழ்விரிக்கும் பசுந்தாட் சரோருகச்
சேக்கையிற்றேவர் தொழவாழ்
செம்மன்மறைவிளையாடு நாவென்றகோயிலிற்
றிகழு மிசைவாணியென்றும்
பொங்கோதவாரிமிசை யறிதுயிலமர்ந்தநற்
புண்ணியர் தமருமனையிற்
பொற்பங்கயச் செல்வியென்று மணிமன்றினிற்
பொலிகின்ற சிவ சோதியோர்
பங்காளியென்று முத்தொழின்முறை நடாத்துநீ
படிமீதிலெளியேனையோர்
பண்டன்புறுந்தொண்டனென்றருள்செய்தாண்டசெயல்
பகர்வதற்கெளிதாகுமோ
கங்காதரக் கருணைவள்ளற்கு மணிமுடி
கவித்த ரசளித்த கனியே
காந்திமதி யுலவு பொழில்சூழ்ந்தவரைவனமருவு
காந்திமதி வடிவரசியே.

3. முத்திக்கு வித்தென்று மைந்தொழினடாத்துமொரு
முதல்வர்புணர் முதல்வியென்று
மூலமறையந்தத்திலே நின்ற பொருளென்றும்
மும்மலச்சேறு கழுவிப்
பத்திக்கடற்குட்படிந்த மெய்த்தொண்டரொடு
பழகிவள ரன்னையென்றும்
பாகசாதனன்முதல் கடவுளர்கள்முடியுழுத
பஞ்சடிச் செல்வியென்றும்
எத்திக்கிலும்புகழு நவகோணமண்டபத்
தெய்தியுறைவாமியென்றும்
இருளற்ற வெளியென்று நானுனையறிந்துய்வ
தெக்காலமோ வறிகிலேன்
கத்திகைக் கருமென்குழற்கவுரியே யன்பர்
கவலையையொழிக்கு மமுதே
காந்திமதியுலவு பொழில்சூழ்ந்தவரைவனமருவு
காந்திமதி வடிவரசியே.

4. பாட்டளி துதைந்தாடு பைந்துளவலங்கலணி
பங்கேருகக் கண்ணனே
பானலொடுபழகியை யரிபரந்தம்பரம்
பரிவை யைச்சினவிமைதோய்
நாட்டத்தரம்பையர்க ளாட்டத்தொடும்பரவு
நாகத்திலுறையுமிறையே
நகைவெண்ணிலாக் கவிகையைங் கணைக்குரியரதி
நாதனே யென்று வறிஞர்
கூட்டத்தினிற் பழகி யீயாதலோபரைக்
குணமற்ற வெங்கோபரைக்
கோளரைக் காமவெறியாளரைப் பாளரைக்
குலவுதமிழோதி யிடராங்
காட்டிற் சுழன்றிடாதுன்ருள் வழுத்தநீ
கருணைசெயவேண்டுமம்மா
காந்திமதி யுலவுபொழில் சூழ்ந்தவரைவனமருவு
காந்திமதி வடிவரசியே.

5. ஆதிமறை யந்தத்திலே யைந்தொழிற்குமுத
லானவனிடப்பாலிலே
அளவற்றகோடி மதியோர்காலுதித்தன்ன
வணிவெள்ளியங்கிரியிலே
கோதிலாநாற்பத்து முக்கோணிலே பனிக்குன்றிலே
குளிர்மதியிலே
கொழுதியிசையளிபாட மதுமழைபிலிற்றுமொரு
கோகநக மலர் மீதிலே.
தீதகற்றுஞ் சோடசாட்சர யுபாசனைசெய்
செல்வருள மாளிகையிலே
செப்புபரநாத நாதாந்தத்திலேநின்று
திகழரசு புரிகின்றநீ
காதலுற்றிடு மெளியனுவிலு நின்றநின்
கருணையெக் கருணையம்மா
காந்திமதியுலவுபொழில் சூழ்ந்தவரைவனமருவு
காந்திமதி வடிவரசியே.

6. உலகமாதாவென்ற பேருன்னுடைத்தென்னி
லொருவர் நிதிபதியென்னவே
யுல்லாசராச கெம்பீரத்தில் வைகமற்
றொருவர் வறுமையினேவுறப்
பலமுதவனீதியோ திங்கண்மரபினில்வந்த
பான்மையோ கருணையிலையோ
பத்தர்க்கிரங்குமெம் மிறைவன் மனையாகியொரு
பங்குற்ற குணமுமிலையோ
அலகிலாநிதியுதவ வகையில்லையோ தினமு
மமருமிட மேருவலவோ
அறம்வளர்த்தெங்கும் புரந்தவளெனப்புவியி
லறைகுவது சரத மலவோ
கலகவிழியாரிதைய மறிவதரிதென்பதுன்
காரணத்தால் வந்ததோ
காந்திமதி யுலவுபொழில் சூழ்ந்தவரை வனமருவு
காந்திமதி வடிவரசியே.

7. தக்க பூசனை யின்றி யெள்ளிமதமேதஞ்செய்
தக்கன் முடிகாய்ந்தழித்தாய்
சாமநிறமேவிவந்தாய் பூசையினிலத்த
சாமபூசையை யுவந்தாய்
பக்குவத்தன் பரிதையத்துறைந்தாய் மலர்சு
பக்குவலையம் புரந்தாய்
பாதகமலம் பரவுவார் தொன்று தொட்டுவரு
பாதகமலந்த விர்த்தாய்
அக்கு மணி பணிநீறு புனைகின்ற செம்மேனி
யக்குழகனைப்புணர்ந்தாய்
அரிமுகுந்தன்பிரமன் முதலினோர் குறைதவிர்த்
தரி முதுகில் வீற்றிருந்தாய்
கக்கு வெங்கனல் விழிப்பகடேறி வருமந்த
கற்சீறியெனை யாளுவாய்
காந்திமதி யுலவுபொழில் சூழ்ந்தவரைவனமருவு
காந்திமதி வடிவரசியே.

8. துதி செய்து நின்றிருப்பாதபங்கேருகத்
துணைமலர்ப்பரவு திறனற்
சுந்தரச் சதுமுகப் பிரமன் மால்கற்பகச்
சோலையிறை திருவை மதியேன்
மதிவகிர்ந்தாலன்ன கூன்மருப்பெருமையூர்
மறலியூர் புக்குவதியேன்
மதவழி நடாத்தி நரகிற் புகுத்துங்கொடிய
மறுசமைய மென்றகளைகட்
டிது பெரிது பெரிதென்று சதுமறைமுழக்குநின்
னெறிற் சமையமான பயிர்செய்
தெஞ்ஞான்று முய்ந்திடுவனிருவினைப்பயனைத்
தியானெனதெனுஞ் சொல்விடுவேன்
கதிரவனை முட்டி மேலண்ட கோளகையைக்
கடந்துவளர் கோபுரத்திற்
காந்திமதி யுலவு பொழில் சூழ்ந்தவரைவனமருவு
காந்திமதிவடிவரசியே.

9. தனையரை யுயிர்த்திளமையைத் துறந்தனமென்று
தாயர்கள் சலிக்க வெறியார்
தாமரைப் பீடிகையின் மாமறை முழக்கொடுறை
சதுமுகர் படைத்து மெலியப்
புனைதிரைக் கடலாடை சுற்றுமொரு பொற்றொடிப்
புவிமகள் சுமந்திடருறப்
பொறிகவிழ்க்குஞ் செந்தழற்கணேற்றெருமையிற்
பொலிகின்ற சமனேவலாற்
பனையனைய வெங்கதைசுழற்றி மிகுபாசமெறி
படர்கள்போய் வந்துதளர
பாழ்நரகம்யாவு நிறைவாழ்வேற வின்னுமிப்
படிமிசை யுதித்திறந்தே
கனலொத்த வெந்துயர்க்கவலையுட் படியாது
கழலிணை தரித்தாள்வையே
காந்திமதி யுலவுபொழில் சூழ்ந்தவரைவனமருவு
காந்திமதி வடிவரசியே.

10. நறைகொப்பிளித் தொழுகு செந்தமிழ்த்தொடையுனது
நாண்மலர்க் கழலிணையிலெந்
நாளும்புனைந்து தொழுநல்லறிவு மோர்காலு
நந்தாத சந்தானமும்
பிறைநுதற் செய்யவாய் மணிநகைத்திருவன்ன
பேரெழிலமைந்த மனையும்
பெருகு நிதியக்குவையு மன்பரிதையங் கண்டு
பேணியருள்கின்ற செயலும்
பொறையுஞ் சிரஞ்சீவியுந் தெய்வமணம்வீசு
போது கொடு பூசிக்கவும்
பொன்றுதயோகவழி தந்தசிவயோகப்
புணர்ப்புமெளியேற் கருளுவாய்
கறைமிடற் றெந்தை நெல்வேலிநாதற்கு மிகு
காதலை யளித்த கனியே
காந்திமதி யுலவுபொழில் சூழ்ந்தவரைவனமருவு
காந்திமதி வடிவரசியே.